Licensed to Post Without Pre-Payment Licence No G 6 TN MS CPP 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# இலவசகாலணி: புரட்சித்தலைவர் திட்டம் அமல்

Regd No. TN - MS [C] 244 420212 4 பக்கம் விலை 70 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 11 சென்னை 5 7 87 ஞாயிறு வெளியூர் திங்கள் 6 7 87 இதழ் 255

## $1\frac{1}{2}$ கோடி பேருக்கு

## 30,000 குடும்பத்திற்கு வேலை வாய்ப்புகள்

சென்னை, ஜூலை, 5- முதலவர் புரட்சித்தலைவர் அறிவித்த இலவச காலணி வழங்கும் திட்டம் விரைவில் அமல்படுத்தப்பட உள்ளது. இத் திட்டத்தின் கீழ் சுமார் 70 லட்சம் குழந்தைகளும் 50 லட்சம் தாய்மார்களும் இலவச காலணி பெறுவார்கள் 30 ஆயிரம் குடும்பத்தினருக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும்.

தமிழகத்திலுள்ள எல்லா குழந்தைகளும் பள்ளிக்கூடம் செல்ல வேண்டும் என்ற சீரிய நோக்கத்தின் அடிப்படையில் முதல்வர் புரட்சித்தலைவர் இலவச சத்துணவு திட்டத்தை அறிவித்து சிறப்பாக செயல்படுத்தி வருகிறார்.

அதே போல இலவச பாடபுத்தகமும் சீருடையும் வழங்கப்பட்டு வருகிறது.

அந்த குழந்தைகளின் பிஞ்சு கால்கள் கொடுமையான வெயிலில் படும்பாட்டை உணர்ந்த முதல்வர் புரட்சித்தலைவர் இலவச காலணி வழங்கும் திட்டத்தை அறிவித்துள்ளார்.

முதியோர் உதவித் தொகை பெறுபவர்கள் இலவச வேட்டி சேலையும் சத்துணவு கூடங்களில் பகல் உணவும் பெற்று வருகிறார்கள்.

அதே போல கிராமப்புறங்களில் காடு மேடுகளிலும் வயல் வரப்புகளிலும் வேலை செய்யும் ஏழைத் தாய்மார்களுக்கும் இலவச காலணி வழங்கும் திட்டத்தையும் முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

அதன்படி குழந்தைகளுக்கும் தாய்மார்களுக்கும் இலவச காலணி வழங்கும் திட்டம் விரைவில் நடைமுறைப்படுத்தப்பட உள்ளது.

### நிரந்தர வேலை வாய்ப்பு

இந்த இலவச காலணி வழங்கும் திட்டத்தின் கீழ் சுமார் 70 லட்சம் குழந்தைகளும் 50 லட்சம் தாய்மார்களும் பயன் பெறுவார்கள். காலணி தயாரிக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த 30 ஆயிரம் குடும்பங்கள் நிரந்தரமான வேலைவாய்ப்பினை பெறுகிறார்கள்.

இத்திட்டத்தின் கீழ் தமிழ்நாடு தோல் வளர்ச்சி கழகம் 70 லட்சம் பேருக்கு இலவசகாலணி தயாரித்து வழங்க உள்ளது.

தமிழ்நாடு கதர்கிராம தொழில் வாரியமும் வி ஐ பி என்ற காலணியை தயாரித்து வருகிறது. இதன்மூலம் 50 லட்சம் பேருக்கு இலவச காலணிகள் தயாரித்து வழங்கப்பட உள்ளது.

சமூகநலத்துறை தனது சிறப்பு திட்டங்கள் மூலமும் காலணிகளை தயாரித்து வருகிறது. இத்திட்டங்கள் மூலமாக 30லட்சம் பேருக்கு இலவச காலணி தயாரிக்கப்பட உள்ளது.

இந்த இலவச காலணி வழங்கும் திட்டத்திற்கு தேவையான தோல் மற்றும் உபபொருட்களை தமிழ் நாடு தோல் வளர்ச்சி கழகம் வழங்க இருக்கிறது.



அன்றாட வாழ்க்கையில் சிரமப்பட்டுக் கொண்டிருக்கும் காலணி தைக்கும் தொழிலில் ஈடுபட்டு வரும் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினர் வாழ்வு வளம் பெறும் இத்திட்டத்தை அந்த சமுதாய மக்கள் வாழ்த்தி வரவேற்றுள்ளனர்.

சுமார் ஒன்றரைகோடி பேருக்கு இலவச காலணி வழங்கும் இத்திட்டத்திற்கு தேவையான தோலை பதனிட்டு வழங்குவது ஆடு யாடு வளர்ப்பது ஆகிய உபதொழில்கள் மூலம் ஒரு லட்சம்பேர் கூடுதலாக நிரந்தர வேலைவாய்ப்பு பெறுவார்கள்,




## கேரளாவில் பத்திரிகையாளர் படும்பாடு: காமிராவை உடைத்து அட்டகாசம்

திருவனந்தபுரம் ஜூலை5 கேரள மாநிலத்தில் பத்திரிகையாளர்கள் மிரட்டப் படுகிறார்கள். அரசு விழாவிற்கு சென்ற நிருபர்களை ஆளும்கூட்டணி இயக்கத்தினர் அடிக்க முற்பட்டனர் அவர்களிடம் இருந்த காமிராக்களையும்பறித்துச் சென்றார்கள்.

கேரள மாநிலத்தில் மார்க்சிஸ்ட் கூட்டணி ஆட்சிப் பொறுப்பேற்ற பிறகு பத்திரிகையாளர்களை அந்த ஆட்சியினர் பாடாய்படுத்தி வருகிறார்கள்.

ஆட்சியினருக்கு ஏற்றபடி சாதகமான செய்திகளையே பத்திரிகைகள் வெளியிட வேண்டும் என்று நிருபர்களை அடியாட்கள் வைத்து மிரட்டுகிறார்கள்.

நேற்று முன் தினம் திருவனந்தபுரத்தில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றில் முதல் அமைச்சர் ஈ கே நாயனார் உள்பட ஐந்து அமைச்சர்கள் கலந்துகொண்டனர்.

மீனவர்களுக்கு புதிய குடியிருப்புகள் 120 கட்டப்பட்டு அவை அந்த விழாவில் வழங்கப்பட இருந்தன.

ஆனால் முதல் அமைச்சர் 10 வீடுகளை மட்டுமே வழங்கி விட்டு மீதி குடியிருப்புகள் பின்னால் வழங்கப்படும் என்று கூறியதைத் தொடர்ந்து கூட்டத்தில் பரபரப்பு ஏற்பட்டது.

மீனவர்கள் பலரும் இப்போதே அனைத்து வீடுகளும் வினியோகம் செய்யப்பட வேண்டும் குடியிருப்புகள் வழங்கப்படுவதில் முறைகேடுகள் நடக்க அனுமதிக்க மாட்டோம் என்று கோரிக்கை விடுத்தனர்.

நிகழ்ச்சிகளை படம்பிடித்து செய்தி சேகரிக்கச் சென்ற பத்திரிகை நிருபர்களை ஆளும் கூட்டணியைச் சேர்ந்தஒரு கூட்டம் மிரட்டியது ஏதாவது செய்தியை வெளியிட்டால் தொலைத்து விடுவோம் என்று மிரட்டினார்கள்

பின்னர் போலீஸ் பாதுகாப்புடன் பத்திரிகையாளர் வெளியே வந்தார்கள்

பத்திரிகையாளர்களை அடிக்க வந்த கூட்டத்தினை போலீசார் தடுத்தி நிறுத்தவில்லை என்றும் குற்றம் சாட்டப்படுகிறது.

அடுத்தநாள் கேரளசட்டசபையில் அமளி துமளி ஏற்பட்டது எம் எல் ஏக்கள் ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டனர்.

இதுபற்றி செய்தி சேகரிக்கச்சென்ற நிருபர்களை கூட்டணி அரசு ஆதாரவாளர்கள் சிலர் பயமுறுத்தினார்கள் பத்திரிகையாளர்களிடம் இருந்த காமிராக்களையும் [புகைப்படக் கருவி] அடியாட்கள் கூட்டம்பறித்துச்சென்றது சட்டசபைக்கு வெளியே காங்கிரஸ் உறுப்பினர்கள் பலர் ஆர்ப்பாட்டம் நடத்திய போது அங்கிருந்த பத்திரிகையாளர்களை இந்தக் கூட்டம் மிரட்டியும் அடிக்கவும் முயன்றதாகக் கூறப்படுகிறது

மலையாள மனோராமா மற்றும் 'இந்து' ஆகிய பத்திரிகைகளைச் சேர்ந்த 2 பேர் கடுமையாக அச்சுறுத்தப்பட்டனர்.

## புரட்சித்தலைவர் ஆட்சியில் கல்வி புரட்சி: தொழில் கல்வி கற்க மாணவர்கள் பேரார்வம்

சென்னை, ஜூலை 5— புரட்சித்தலைவர் ஆட்சியில் தொழில்கல்வி கற்க மாணவர்கள் பேரார்வம் காட்டி வருகிறார்கள்

புரட்சித்தலைவர் முதல்வராக ஆட்சி பொறுப் பேற்றபிறகு வாழ்க்கைக்கு உதவும் தொழிற்கல்வித் திட்டத்தை அமலாக்கினார்.

இதையடுத்து, தமிழகத்தில் ஏராளமான தொழில்நுட்ப பள்ளிகள் ஏற்பட்டன.

தமிழ்நாட்டில் பரவலாக ஏராளமான பொறியியல் கல்லூரிகளும் துவக்கப்பட்டன.

இதன் மூலம் தமிழக கல்வித்துறையில் பெரும் மாறுதல் ஏற்பட்டது

ஏராளமான மாணவ-மாணவியர் தொழில்கல்வி பயின்று வருகிறார்கள்

தொழில் கல்வி கற்க தமிழக மாணவர்கள் பேரார்வம் காட்டி வருகிறார்கள்.

இந்தஆண்டு மட்டும் தமிழகத்தில் பொறியியல் மற்றும் மருத்துவக் கல்லூரிகளில் சேர 16 ஆயிரம் பேர் நுழைவுத் தேர்வு எழுதியுள்ளனர்

சென்னை நகரில் மட்டும் 6 ஆயிரத்து 400 பேர் பொறியியல் கல்லூரிக்கான நுழைவுத் தேர்வு எழுதினர். இதில் 1300பேர் பெண்கள்.

விவசாயக் கல்லூரிகளில் சேர தமிழகத்தில் 8 ஆயிரத்திற்கும் அதிக மாணவர்கள் நுழைவுத் தேர்வு எழுதியுள்ளார்கள்.

சென்னையில் நுழைவுத் தேர்வு எழுதிய மாணவர்களுக்கு செதியாக பல்லவன் போக்குவரத்துக் கழகம் விசேஷபஸ்களை விட்டது

இன்று மருத்துவக் கல்லூரிக்கான நுழைவுத் தேர்வு நடைபெறுகிறது

ஆண்டுக்கு ஆண்டு நுழைவுத்தேர்வு எழுதும் மாணவ - மாணவிகளின் எண்ணிக்கை கூடிக் கொண்டே போகிறது

தமிழக அரசின்தொழில் கல்வித் திட்டத்திற்கு மாணவர்களிடையே பேராதரவு உள்ளது

## எல்லை காந்தி கபார்கான் உடல்நிலை கவலைக்கிடம்

புதுடெல்லி, ஜூலை 5- எல்லை காந்தி என்று அழைக்கப்படும் கான அப்துல் கபார்கான் உடல் நிலை கவலைக்கிடமாக இருப்பதாக மருத்துவர்கள் தெரிவித்துள்ளனர். அவரது நினைவு சக்தி சற்று அபிவிருத்தி அடைந்த போதிலும் தொடர்ந்து உடல்நிலை கவலைக் கிடமாக இருப்பதாகமருத்துவ அறிக்கைதெரிவிக்கிறது

கபார்கான் உடல்நிலை இருதய நிபுணர்கோயல் பரிசோதித்தார்.

துணைஜனாதிபதி வெங்கட்ராமன் இன்று மருத்துவமனைக்கு வந்து கபார்கானைப் பார்த்தார் டெல்லி லெப்டினென்ட் கவர்னர் கபூரும் மருத்துவமனைக்கு வந்தார் கபார்கான் உடல் நிலையை மருத்துவர் குழு கண்காணித்து வருகிறது

## பத்திரிகையாளருக்கு ஓய்வூதியம்: கழக அரசு பரிசீலனை

சென்னை ஜூலை 5 ஓய்வு ஊதியம் அளிப்பதில் பத்திரிகையாளர்களுக்கு வரையறுக்கப்பட்டுள்ள வருமான உச்சவரம்பை நீக்குவது பற்றி கழக அரசு பரிசீலனை செய்யும் என்று செய்தி அறநிலையத்துறை அமைச்சர் வி வி சுவாமிநாதன் கூறினார்

சென்னை நிருபர்கள் சங்கப் சார்பில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றில் அமைச்சர் வி வி சுவாமிநாதன் கலந்து கொண்டு பேசினார் முன்னதாக நிருபர்கள் சங்கத்தலைவர் எஸ் ஜகன்நாதன் வரவேற்றார் அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் பேசுகையில் கூறியதாவது:

தமிழகத்தில் புரட்சித் தலைவர் அரசு பல்வேறு முன்னேற்றத்திட்டங்களை செயல்படுத்தி வருகிறது ஏழை எளிய மக்கள் வாழ்வில் ஏற்றம் அடைவதற்கான பொருளாதார திட்டங்களை கழக அரசு அக்கறையுடன் செயல்படுத்தி வருகிறது

கடந்த 10 ஆண்டுகால ஆட்சியில் புரட்சித் தலைவர் அரசு நடத்தியுள்ள சாதனைகள் ஏராளம் கல்வி, குடியிருப்பு தொழில் சமுதாய முன்னேற்றம் இப்படி அனைத்து துறைகளிலும் ஏற்படுத்தியுள்ள சாதனைகளை நாடே போற்றுகிறது.

கழக அரசின் சாதனைகளை பத்திரிகையாளர்கள் மக்களுக்கு விளக்கிக்கூற வேண்டும் ஒரு அரசின் குறைபாடுகளை எடுத்துச் சொல்வதை தவறு என்று சொல்லமாட்டேன் ஆனால் அரசின் சாதனைகளை பத்திரிகைகள் பாராட்ட முன்வரவேண்டும்

சென்னை நிருபர்கள் சங்கத்துக்கு நல்லபலவசதியுடன்கூடிய வேறொரு இடத்தை ஒதுக்குவதற்கான நடவடிக்கைகளை நான் மேற்கொள்வேன் இதற்கான ஏற்பாடுகளை விரைவில் செய்யவிருக்கிறேன்.

மூத்த பத்திரிகையாளர்கள் ஓய்வு பெறும்போது அவர்களுக்கு ஓய்வு ஊதியம் அளிப்பதில வருமான உச்சவரம்பு நிர்ணயிக்கப்பட்டுள்ளது,

இந்த உச்சவரம்பை அறவே நீக்குவது பற்றி அரசு பரிசீலனை செய்யும் ஓய்வு ஊதியம் கோரி பத்திரிகையாளர்கள் அனுப்பும் விண்ணப்பங்களை ஆராய்ந்து முடிவு செய்ய ஒரு குழுவை அரசு நியமிக்க விருக்கிறது தகுதி அடிப்படையில ஓய்வு ஊதியம் பெறுவதற்கான பத்திரிகையாளர்களை அந்தக்குழு தேர்ந்து எடுக்கும்

இவ்வாறு அமைச்சர் வி வி சுவாமிநாதன் கூறினார்.

## சப்-இன்ஸ்பெக்டர்கள்: தேர்வு பெற்றோருக்கு பயிற்சி பற்றி அறிவிப்பு

ராமநாதபுரம். ஜூலை 5- சப் இன்ஸ்பெக்டர்களாக தேர்ச்சி பெற்றோருக்கு 4இடங்களில் பயிற்சி அளிக்கப்படும் என டி ஜி பி ரவீந்திரன் கூறினார்

ராமநாதபுரத்தில் டி ஜி பி ரவீந்திரன் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார் அப்போது அவர் கூறியதாவது:-

மதுரை நகருக்கு விரைவில் போலீஸ் கமிஷனர் நியமிக்கப்படுவார் இரண்டு மாதத்திற்குள் இதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுவிடும்

சென்னைநகரில்போலீஸ் குதிரைப் படை உள்ளது. அதே போல் மதுரையிலும் குதிரைப்படை அமைக்கப்படும் இதற்காக சென்னையில் குதிரைப்படை தயார் செய்யப்பட்டு வருகிறது.

மதுரை நகரில் வழிப்பறி கொள்ளை போன்றவற்றை தவிர்க்க போலீசார் தீவிரமாக செயல்பட்டு வருகின்றனர்,

காவல் துறைக்கு நவீன ஆயுதங்கள் வழங்க வேண்டும் அப்படி இருந்தால் தான். அவர்கள் குற்றவாளிகளை விரைவில் பிடிக்க முடியும் இதற்கு மத்திய அரசு முயற்சி செய்ய வேண்டும்

தற்போது தமிழகத்தில் உள்ள தமிழ்நாடு சிறப்பு போலீசாருக்கு நவீன ஆயுதங்கள் வழங்கப்பட்டு வருகிறது.

தற்போது ராமேஸ்வரத்தில் கடல்பாதுகாப்புபோலீசார் சேர்ந்து பணிகளில் ஈடுபட்டு வருகின்றனர்.

இதேபோல் மற்ற துறைமுகங்களிலும் கடல் பாதுகாப்பு போலீசார் விரைவில் நியமிக்கப்படுவார்கள்

மதுரை நகரில் தற்போது பெண்போலீசார் பணியாற்றிவருகிறார்கள்.

கூடுதலாக பெண் போலீசார் நியமிக்கும் எண்ணம் இல்லை.

சமீபத்தில் சப்-இன்ஸ்பெக்டர் தேர்வு நடைபெற்றது

இதில் 1065பேர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர் இவர்களுக்கு சென்னை அசோக்நகர், வேலூர் ஆவடி மணிமுத்தாறு ஆகிய இடங்களில் பயிற்சி அளிக்கப்படும்.

இவ்வாறு டி ஜி பி ரவீந்திரன் நிருபர்களிடம் கூறினார்.

## விமான விபத்து:

மான்டானா, (அமெரிக்கா) ஜூலை 5- அமெரிக்க நாட்டில் நடந்த விபத்து ஒன்றில் 10 பேர் இறந்தனர் விமானம் நொறுங்கி வீழ்ந்ததில் இவ்விபத்து ஏற்பட்டது

தலைமைக் கழக அறிவிப்பு

# இதயதெய்வம் புரட்சித்தலைவர்

## பிறந்தநாள் விழா மற்றும் புரட்சித்தலைவர்

தமிழகத்தின் முதல்வராக ஆட்சிப் பொறுப்பினை ஏற்று 10 ஆண்டுகள் நிறைவு பெற்று முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையில் அமைந்த கழக அரசு பதினொன்றாம் ஆண்டில் வெற்றிகரமாக அடியெடுத்து வைப்பதை யொட்டி பொற்கால ஆட்சி படைத்த புரட்சித்தலைவர் அரசு 10 ஆண்டுகளில் ஆற்றிய அரும் பெரும் பணிகள் பற்றிய

## சாதனை விளக்க பொதுக்கூட்டங்கள்

**8-7-1987 புதன்கிழமை**

காரிமங்கலம் ஒன்றியம்

தர்மபுரி மாவட்டம்

சிறப்புரை

திரு எஸ் டி உக்கம்சந்த் பி.எஸ்ஸி அவர்கள்

[தலைவர் தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம்]

திரு கே ஆர் சின்னராசு எம் எல் ஏ அவர்கள்

[தர்மபுரி மாவட்ட கழகச் செயலாளர்]

திரு ஆர் ராஜமாணிக்கம் எம் எல் ஏ அவர்கள்

டாக்டர் கோ சமரசம் எம் எல் ஏ அவர்கள்

[தர்மபுரி மாவட்ட எம் ஜி ஆர் மன்ற தலைவர்]

திரு பி வி பெரியசாமி அவர்கள்

[தர்மபுரி மாவட்ட கழக இணைச் செயலாளர்]

திரு டி உதயகுமார் அவர்கள்

[தர்மபுரி மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர்]

திரு எம் ஜி சேகர் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு ஏ டி சி சந்திரன் அவர்கள்

[காரிமங்கலம் ஒன்றிய கழகப் பொறுப்பாளர்]

**11-7-1987 சனிக்கிழமை**

சென்னை

துறைமுகம் தொகுதி

47வது வட்டம்

சிறப்புரை

திரு திருப்பூர் மணிமாறன் அவர்கள்

[தலைவர் தமிழ்நாடு வீட்டுவசதி வாரியம்]

திரு தரங்கை கண்ணன் அவர்கள்

கலை நிகழ்ச்சி

திரு டி எம் ஜானி கலைக்குழுவினர்

கூட்ட ஏற்பாடு

திரு எம் ஏ காதர் அவர்கள்

[47வது வட்ட கழகச்செயலாளர்]

**16-7-1987 வியாழக்கிழமை**

சென்னை

திருவல்லிக்கேணி தொகுதி

98 வது வட்டம்

சிறப்புரை

அமைச்சர் திரு கே. கே. எஸ்.எஸ் ஆர். இராமச்சந்திரன் அவர்கள்

திரு. இ. மதுசூதனன் அவர்கள்

(சென்னை மாவட்ட எம் ஜி ஆர் மன்ற செயலாளர்)

கூட்ட ஏற்பாடு

திரு. ஏ மணி அவர்கள்

திரு எஸ் அமீர்பாய் அவர்கள்

(புரட்சித்தலைவர் எம் ஜி ஆர் மன்றம்)

## புதுக்கோட்டை மாவட்டத்தில் 154 தொடர் பொதுக்கூட்டங்கள்

கூட்டங்கள் அமைப்பு

திரு. எஸ். ரகுபதி பி எஸ்ஸி. அவர்கள்

(புதுக்கோட்டை மாவட்ட கழகச் செயலாளர்)

### நான்காவது பட்டியல்

**8-7-1987 புதன்கிழமை**

சடையம்பட்டி

சிறப்புரை

திரு சு மணவைமாறன் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு சாமிக்கண்ணு அவர்கள்

எம் ஜி ஆர் இளைஞர் அணி

திரு மருதமுத்து அவர்கள்

**8-7-1987 புதன்கிழமை**

திருக்களம்பூர்

சிறப்புரை

கவிஞர் மணிமொழி அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு அடைக்கல் அவர்கள்

திரு சுப்பிரமணியன் அவர்கள்

திரு டி பாலு அவர்கள்

திரு முக்கையா அவர்கள்

**9-7-1987 வியாழக்கிழமை**

விராச்சிமலை

சிறப்புரை

திரு மணவை மாறன் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு பெரியய்யா தேவர் அவர்கள்

திரு பொன்னம்பலம் அவர்கள்

**9-7-1987 வியாழக்கிழமை**

புதுக்கோட்டை நகரம்

சிறப்புரை

கவிஞர் மணிமொழி அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு திருக்குறள் காசிநாதன் அவர்கள்

திரு ரகிம் அவர்கள்

திரு கோபால் அவர்கள்

**10-7-1987 வெள்ளிக்கிழமை**

செம்பாட்டூர்

சிறப்புரை

திரு பம்மல் நல்லதம்பி அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு பழனிவேலு அவர்கள்

**10-7-1987 வெள்ளிக்கிழமை**

மின்னாத்தூர்

சிறப்புரை

திரு தளபதி சாதுராசன் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு பொன்ராமு அவர்கள்

எம் ஜி ஆர் இளைஞர் அணி

**11-7-1987 சனிக்கிழமை**

தெம்மாவூர்

சிறப்புரை

திரு பம்மல் நல்லதம்பி அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு இரா சினைப்பன அவர்கள்

**11-7-1987 சனிக்கிழமை**

புதுக்கோட்டை

சிறப்புரை

திரு தளபதி சாதுராசன் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு செல்லமணி எம் சி அவர்கள்

திரு சுப்பிரமணியம் அவர்கள்

**12-7-1987 ஞாயிற்றுக்கிழமை**

கல்லாசிக்கோட்டை

சிறப்புரை

திரு பொள்ளாச்சி எம் வி ரத்தினம் எம் எல் ஏ அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு அப்துல்ரசாக் அவர்கள்

**12-7-1987 ஞாயிற்றுக்கிழமை**

வாராப்பூர்

சிறப்புரை

திரு இரா அண்ணாநம்பி எம் பி அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு வண்ணியானந்தம் அவர்கள்

**13-7-1987 திங்கட்கிழமை**

தச்சங்குறிச்சி

சிறப்புரை

திரு பொள்ளாச்சி எம் வி ரத்தினம் எம் எல் ஏ அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு பிரான்ச்ஸ் அவர்கள்

**13-7-1987 திங்கட்கிழமை**

கிள்ளுக்கோட்டை

சிறப்புரை

திரு இரா அண்ணாநம்பி எம் பி அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு அருள்சாமி அவர்கள்

மாவட்ட பிரதிநிதி

**14-7-1987 செவ்வாய்க்கிழமை**

கொடும்பாளூர்

சிறப்புரை

திரு நெல்லை பாலாஜி அவர்கள்

கூட்ட ஏற்பாடு

கவிஞர் குழ காத்தமுத்து அவர்கள்

**14-7-1987 செவ்வாய்க்கிழமை**

அறந்தாங்கி நகராட்சி

சிறப்புரை

கவிஞர் முத்துலிங்கம் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு ஷேக்முகமது எம் சி அவர்கள்

திரு ஹரிஹரன் அவர்கள்

**15-7-1987 புதன்கிழமை**

ஜெகநாதப்பட்டினம்

சிறப்புரை

திரு நெல்லை பாலாஜி அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு ஏ ஆர் எஸ் காதர்மொய்தீன் அவர்கள்

**15-7-1987 புதன்கிழமை**

கொடுமங்கலம்

சிறப்புரை

கவிஞர் முத்துலிங்கம் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு இளந்தமிழன் அவர்கள்

திரு ரத்தினம் அவர்கள்

**16-7-1987 வியாழக்கிழமை**

புதுக்கோட்டை நகராட்சி

சிறப்புரை

திரு போளூர் கோவிந்தன் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு நாராயணசாமி அவர்கள்

திரு ராஜாமுகமது அவர்கள்

**16-7-1987 வியாழக்கிழமை**

கல்லூர்

சிறப்புரை

பேராசிரியர் எட்வர்டு தனராஜ் எம் ஏ எம் பில் அவர்கள்

காமராசர் மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச்செயலாளர்

கூட்ட ஏற்பாடு

திரு கணேசன் அவர்கள்

**17-7-1987 வெள்ளிக்கிழமை**

ரகுநாதபுரம்

சிறப்புரை

திரு போளூர் கோவிந்தன் அவர்கள்

## ஜனாதிபதி ஜைல்சிங்-பிரதமர்ராஜீவ் சந்திப்பு

### சோவியத் பயணம் பற்றி விளக்கம்

புதுடெல்லி, ஜூலை 5 ரஷ்யாவில் நடைபெறும் இந்திய கலை விழாவில் கலந்து கொண்டு விட்டு டெல்லி திரும்பிய பிரதமர் ராஜீவ் நேற்று ஜனாதிபதி ஜைல்சிங்கை சந்தித்துப் பேசினார் சோவியத் பயணம் பற்றி பிரதமர் ராஜீவ் காந்தி ஜனாதிபதியிடம் விளக்கி கூறினார்.

ரஷ்ய தலைநகர் மாஸ்கோவில் கடந்த 3ம்தேதி இந்திய கலைவிழா கோலாகலமாகத் துவங்கியது தெரிந்ததே பிரதமர் ராஜீவ்காந்தி மாஸ்கோ சென்று விழாவில் கலந்து கொண்டார்

ரஷ்யத்தலைவர் கோர்பசேவும் பிரதமர் ராஜீவ் காந்தியும்விழாவை துவக்கி வைத்தனர்.

ராஜீவ்காந்தி தனது மனைவி சோனியாவுடன் விழாவில் கலந்து கொண்டார்.

மாஸ்கோவில் ரஷ்ய தலைவரும் ராஜீவும் இரு நாட்டு பிரச்சினைகள் பற்றி ஆலோசனை நடத்தினார்கள் சர்வதேச பிரச்சினைகள் குறித்தும் அவர்கள் பேசினர்

புதுடெல்லி திரும்பிய பிரதமர் நேற்று ஜனாதிபதி ஜைல்சிங்கை அவரது இல்லத்தில் சந்தித்துப் பேசினார் தனதுசோவியத் பயணம் பற்றியும் பிரதமர் அப்போது ஜைல்சிங்கிடம் விளக்கிக் கூறினார் இரு வரும் பல்வேறு அரசியல் விவகாரங்கள் குறித்து கருத்து பரிமாற்றங்கள் செய்து கொண்டனர்

பிரதமர் ராஜீவ் தனது மனைவி சோனியா மகன் ராகுல் மகள் பிரியங்கா ஆகியோருடன் சென்றிருந்தார்.

பிரதமர் குடும்பத்தினருக்கு ஜைல்சிங் விருந்தொன்று அளித்தார். ஜனாதிபதியின் இரண்டு மகன்கள் மருமகன் ஆர். எஸ். விருதி ஆகியோரும் விருந்தில கலந்து கொண்டனர்

ரஷ்யாவில் நடைபெற்று வரும் இந்திய விழா பற்றிய விவரங்களையும் ராஜீவ் ஜனாதிபதியிடம் எடுத்துக்கூறினார்.

ஜனாதிபதி குடும்பத்துக்கு விருந்து ஒன்று அளிக்கவிருப்பதாக பிரதமர் ஏற்கனவே கடந்த மாதம் தெரிவித்திருந்தார் அதற்கான அழைப்பை நேற்று ராஜீவ் ஜனாதிபதியிடம் கொடுத்தார்

கூட்ட ஏற்பாடு

திரு சுலைமான் அவர்கள்

எம் ஜி ஆர் இளைஞர் அணி

**17-7-1987 வெள்ளிக்கிழமை**

நடுப்பட்டி

சிறப்புரை

பேராசிரியர் எட்வர்டு தனராஜ் எம் ஏ எம்பில் அவர்கள்

காமராசர் மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணிச் செயலாளர்

கூட்ட ஏற்பாடு

திரு முத்தழகு அவர்கள்

நடுப்பட்டி ஊராட்சி மன்றத்தலைவர்

**18-7-1987 சனிக்கிழமை**

புதுக்கோட்டை

சிறப்புரை

திரு எஸ் ஆர் இராதா அவர்கள்

தலைவர் தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம்

கூட்ட ஏற்பாடு

திரு ஜின்னா அவர்கள்

திரு ராஜாமுகமது எம் சி அவர்கள்

**18-7-1987 சனிக்கிழமை**

பனசகுளம்

சிறப்புரை

திரு கோடம்பாக்கம் குமார் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு இ கோவிந்தராஜ் அவர்கள்

எம் ஜி ஆர் இளைஞர் அணி

**19-7-1987 ஞாயிற்றுக்கிழமை**

ராங்கியம்

சிறப்புரை

திரு எஸ் ஆர் இராதா அவர்கள்

தலைவர் தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம்

கூட்ட ஏற்பாடு

திரு சூசை மாணிக்கம் அவர்கள்

**19-7-1987 ஞாயிற்றுக்கிழமை**

சிவலூர்

சிறப்புரை

திரு கோடம்பாக்கம் குமார் அவர்கள்

கூட்ட ஏற்பாடு

திரு ஆவுடைத்தேவர் அவர்கள்

(பட்டியல் தொடரும்)

ஜெயலலிதா எம். பி.

சென்னை-14 கொள்கைபரப்புச் செயலாளர்

5-7-1987 அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

# யாழ் தமிழருக்கு உதவ மூன்றாவதுஉணவுகப்பல் 7ந் தேதி புறப்படுகிறது

சென்னை, ஜூலை 5. யாழ்ப்பாணம் தமிழர்களுக்கு உதவுவதற்கான உணவுப் பொருட்களை ஏற்றிக்கொண்டு மூன்றாவது உணவுக் கப்பல் சென்னையிலிருந்து நாளை மறு தினம் 7ந் தேதி புறப்படுகிறது.

இலங்கை ராணுவத்தின் தாக்குதலுக்கு ஆளாகி உணவு இன்றி தவிக்கும் தமிழர்களுக்கு உதவ ஐலண்டு பிரைட் பருக்கா ஆகியகப்பல்களில்முதல்வர் புரட்சித்தலைவரின் முயற்சியால் இந்திய அரசு உணவுப்பொருட்கள் அனுப்பியது.

பருக்கா கப்பல் காங்கேசன் துறையில் உணவுப் பொருட்களை இறக்கிக் கொண்டிருக்கிறது.

இதற்கிடையே மூன்றாவது கப்பல் உணவுப் பொருட்களை ஏற்றிக் கொண்டு செல்கிறது. ஐலண்டுபிரைட் என்ற கப்பலிலேயே இந்தப் பொருட்கள் அனுப்பி வைக்கப்பட இருக்கின்றன.

உணவுப் பொருட்களை ஏற்றிக்கொண்டு அந்தக் கப்பல் நாளை மறுதினம் செவ்வாய்க்கிழமை சென்னையிலிருந்து புறப்படுகிறது. இதற்காக உணவுப் பொருட்களை கப்பலில் ஏற்றும்வேலை இன்று தொடங்குகிறது.

இந்தக் கப்பலில் 150 டன் அரிசி 100 பீப்பாய் எண்ணெய் 20 ஆயிரம் டஜன் தீப்பெட்டி 35 டன் பருப்பு 15 டன் பாமாயில் 10 டன் பால் பவுடர் 500 கிலோ கொத்தமல்லி கோதுமை மாவு மற்றும் மருந்துப் பொருட்கள் கப்பலில் அனுப்பி வைக்கப் படுகின்றன.

## இலங்கை ராணுவம் சுட்டு இந்தியமீனவர் படுகாயம்

சென்னை ஜூலை 5. இந்தியமீனவர் ஒருவரை இலங்கை கடற்படையைச் சேர்ந்தவர்கள் சுட்டதில் அவர் படுகாயமடைந்துள்ளார்.

அவருடன் படகில் பயணம் செய்த மற்ற ஆறு பேர் உள்பட இவரும் இலங்கை கடற்படையினரால் கைதுசெய்யப்பட்டுள்ளனர். இவர்கள் இலங்கையிலுள்ள காரைநகர் ராணுவ முகாமில் வைக்கப் பட்டிருப்பதாக விடுதலைபுலிகள் அமைப்பு தெரிவித்துள்ளது.

படுகாயமடைந்த இந்திய மீனவருக்கு சிகிச்சை அளித்து வருகின்றனர். இது தொடர்பாக கப்பல் படை உயரதிகாரிகள் விசாரித்து வருகின்றனர்.

## டி.வி.யில் மேலும் இருசினிமாபடம்

புதுடெல்லி ஜூலை 5. டெலிவிஷனில் மேலும் இரண்டு சினிமாப்படங்கள் காட்டப்படுகின்றன இரண்டாவது நான்காவதுசனிக்கிழமைகளில் இவை ஒளிபரப்பப்படும்.

டெலிவிஷனில் புதிய நிகழ்ச்சிகள் பற்றிய அறிக்கையை டெல்லி டெலிவிஷன் நிலையம் வெளியிட்டுள்ளது அதில் கூறியிருப்பதாவது:

இப்போது வெள்ளிக்கிழமை இரவு 11.30 மணிக்கு ஒருசினிமா படமும், சனிக்கிழமை மாலையில் ஒரு சினிமா படமும் ஞாயிற்றுக்கிழமை இரண்டு சினிமா படங்களும் ஒளிபரப்பபட்டு வருகின்றன.

இனிமேல் ஒவ்வொரு இரண்டாவது நான்காவது சனிக்கிழமைகளில் தலா ஒரு படமாக இரண்டு சினிமா படங்கள் கூடுதலாக ஒளிபரப்பப்படும் இந்தப் படங்கள் மதியம் ஒளிபரப்பபடும்.

இரண்டுப் படங்களுமே மாநில மொழிபடங்களாக இருக்கும் வாரத்தில்எல்லா நாட்களிலும் குழந்தைகளுக்கான நிகழ்ச்சிகள் ஒளிபரப்பபடும்.

### விவசாயிகள் நிகழ்ச்சி

விவசாயிகள் நிகழ்ச்சி வழக்கம் போல் வாரத்தில் ஐந்து நாட்கள் ஒளிபரப்படும் ஆனால் அதில் ஒரு நாள் கிராமிய பெண்கள் பற்றிய நிகழ்ச்சியாக இருக்கும்.

இசை நடனம் போன்ற தேசிய நிகழ்ச்சிகள் தற்போது இரவு 10.30 மணிக்கு மேல் ஒளிபரப்பப்படுகின்றன

அந்த நிகழ்ச்சிகளை சற்று முன்னதாக ஒளிபரப்ப வேண்டும் என்று பொது மக்களிடம் இருந்து கோரிக்கைகள் வந்துள்ளன

அதை ஏற்று இனிமேல் இசை நடனம் போன்ற தேசிய நிகழ்ச்சிகள் இரவு 9.30 மணிக்கு ஒளிபரப்பப்படும்

இந்த புதிய நிகழ்ச்சிகள் இன்று முதல் அமலுக்கு வருகின்றன

மேற்கண்டவாறு அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## பிஜி தீவில் ஜனநாயக ஆட்சி: இந்தியா நடவடிக்கை

புதுடெல்லி ஜூலை 5. பிஜித்தீவில் ஜனநாயக ஆட்சி கவிழ்க்கப்பட்டு ராணுவ ஆட்சி நடக்கிறது

மீண்டும் சட்டவிதிமுறைகளின்படி ஜனநாயக ஆட்சி ஏற்படுவதற்கு இந்தியா முழுமூச்சுடன் ஈடுபடும் என்று அறிவித்திருக்கிறது

இந்த விவகாரத்தில் காமன்வெல்த் நாடுகள் அமைப்பு மேற்கொள்ளும் நடவடிக்கைகளுக்கு இந்தியா முழுஆதரவுதரும் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## ஏஜண்டுகள் தேவை

1988-ம் வருட படக் காலண்டர்கள் அலுவலக் காலண்டர்கள் டைரிகள் ஆகியவற்றிற்கு ஆர்டர்கள் சேகரிக்க ஏஜண்டுகள்தேவை அதிக கமிஷன் போனஸ் வழங்கப்படும்

ராஜ பைன் ஆர்ட்ஸ்
தபால்பெட்டி எண் 313
சிவகாசி 626123

## ஏல விற்பனை

1 J. Bherulal 14, Ganpathy Street. ShenoyNagar. Madras 30 (1-5-84 முதல் 31-5-86 வரை) ஏலத்தேதி 13-7-87 அன்று பிற்பகல் 12 மணிக்கு. 2. P. Shyamalal 12 Parameswara Nagar, T. P. Chatram Madras-30 (1-12-84 முதல் 31-3-86 வரை) ஏலத்தேதி 13-7-87 அன்று மதியம் 1 மணிக்கு. 3. H Asharam Choudhary 36 Vanniar Street Choolaimedu, Madras-94 (1-8-85 முதல் 31-5-86 வரை) ஏலத்தேதி 15-7-87 அன்று பிற்பகல் 12 மணிக்கு 4 H. Vishnuram Choudhary 39. Annaneeum pathai Choolaimedu, Madras 94 (1-8-85 முதல் 31-5-86 வரை) ஏலத்தேதி 15-7-87 அன்று மதியம் 1 மணிக்கு 5 T Prabukumar 31. Narasimma Nagar pulianthope Madras-12 (1-8-84 முதல் 31-5-86 வரை) ஏலத்தேதி 16-7-87 அன்று பிற்பகல் 12 மணிக்கு 6 G Bhawarlal. 7 Suadaram Pillai Street Purasawakkam Madras-7 (1-6-84 முதல் 30-4-85 வரை) ஏலத்தேதி 16-7-87 அன்று மதியம் 1 மணிக்கு 7. Kataria 29 Ellamman Koil Street Kottur Madras-85 (1-8-85 முதல் 31-5-86 வரை) ஏலத்தேதி 17-7-87 அன்று பிற்பகல் 12மணிக்கு 8 B Nemichand Jain 2. Mangala Puram 5th Street Chetpet madras 31 (1-6-85 முதல் 31-12-85 வரை) ஏலத்தேதி 17-7-87 அன்று மதியம் 1 மணிக்கு 9 M S Kankariya & Co 150 Satchithanandam Street Kosapet Madras 12 (1-10-84 முதல் 30-11-85 வரை) ஏலத்தேதி 27-7-87 அன்றுகாலை 10 மணிக்கு.

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் வகையறா பொருட்களை வருவாய்த் துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் திரு எம் தாமோதரன் த/பெ ஜெயின் 150 சச்சிதானந்தம் தெரு கொசப்பேட்டை, சென்னை 12ல் மாவட்ட ஆட்சியாளரின் உத்திரவுப்படி மேற்குறிப்பிட்ட தேதிகளில் ஏலம் போடுவார்.

## பஸ் விபத்து: சாவு எண்ணிக்கை உயர்வு

ஜம்மு, ஜூலை 5. ஜம்மு அருகே கோடா என்ற இடத்தில் ஒருபஸ் பள்ளத்தில் விழுந்து விபத்துக்குள்ளானது

இதில் 27 பேர் மரணமடைந்தனர் 8 பேர் பலத்த காயமுற்றனர்

விபத்து நடந்த இடத்துக்கு ஜம்மு காஷ்மீர் முதல்வர் பரூக் அப்துல்லா சென்று பார்வை யிட்டார்.

# ஆர். வெங்கட்ராமன் வெற்றி உறுதியானது காங்கிரஸ் நம்பிக்கை

புதுடெல்லி, ஜூலை 5. ஜனாதிபதி தேர்தல் வேட்பாளர் ஆர் வெங்கட்ராமனின் வெற்றி உறுதியாகி விட்டதாக காங்கிரஸ் கட்சி கருதுகிறது. ஜனாதிபதி தேர்தல் வரும் 13ந் தேதி நடக்கிறது.

தேர்தலில் காங்கிரஸ் கட்சி சார்பில் பார்வையாளர்கள் நியமிக்கப்படுகிறார்கள்

ஆர் வெங்கட்ராமனுக்கு அமோக ஆதரவு இருப்பதாகவும் அவரது வெற்றி உறுதியாகி விட்டதாகவும் காங்கிரஸ் வட்டாரம் கூறுகிறது

### பெர்னாண்டஸ் சீற்றம்

எதிர்க்கட்சி வேட்பாளர் வெற்றி பெற்றிருக்க முடியும். ஆனால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பிடிவாதமாக இருந்து காங்கிரஸ் வெற்றிக்கு உதவி இருக்கிறது என்று ஜனதா கட்சித் தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் ஐதராபாத்தில் நிருபர்களிடம் கூறினார்.

ஜைல்சிங்கை மார்க்சிஸ்ட் தலைவர் அரிகிருஷ்ணசிங் சுர்ஜித் சந்தித்து மீண்டும் ஜனாதிபதி தேர்தலில் நிற்க வேண்டுகோள் விடுத்திருக்கிறார். பின்னர் மார்க்சிஸ்ட் கட்சி தனது போக்கை மாற்றிக் கொண்டு கிருஷ்ணய்யரை நிறுத்த முடிவு செய்தது. இதன்மூலம் ஆர். வெங்கட்ராமன் வெற்றி உறுதியாகி விட்டது.

ஜனாதிபதி தேர்தல் என்பது வெறும் சம்பிரதாயமாகி விட்டது என்று பெர்னாண்டஸ் கூறினார்.

## வெங்கட்ராமன் வெற்றி பெற பாதயாத்திரை

சென்னை, ஜூலை 5. ஜனாதிபதி தேர்தலில் போட்டியிடும் வெங்கட்ராமன் வெற்றி பெற இந்திய நேரு தேசிய காங்கிரஸ் கட்சியின் தலைவர் பணிக்கண்டன் 40 நாட்கள் பாதயாத்திரை செல்கிறார். வரும் 6ந் தேதி காலை 10மணி அளவில் குமரி அருள்வம் முன்னிலையில் அமைச்சர் ராஜாராம் பாதயாத்திரையைத் துவக்கி வைக்கிறார் பாதயாத்திரையின்போது அவர் பலகோயில்களில் வெங்கட்ராமன் பெயரில் அர்ச்சனை செய்கிறார்.

# பாண்டியாறு-புன்னம்புழாதிட்டம் மத்திய அமைச்சருடன் சாத்தூர் ராமச்சந்திரன் ஆலோசனை

கோவை ஜூலை 5. பாண்டியாறு புன்னம்புழா நீர்ப்பாசன திட்டம் பற்றி அமைச்சர் கே கே எஸ் எஸ் ஆர் ராமச்சந்திரன் மத்திய அமைச்சர் பிரபுவுடன் பேச்சுவார்த்தை நடத்தினார். இத்தகவலை கோவையில் நடந்த ஒரு விழாவில் மத்திய அமைச்சர் பிரபு தெரிவித்தார்.

பாண்டியாறு புன்னம்புழா நீர்பாசனத் திட்டம் குறித்து கூடிய விரைவில் மத்திய அரசு பேச்சுவார்த்தை நடத்தும் என்றும் மத்திய அமைச்சர் பிரபு கூறினார்

பாண்டியாறு புன்னம்புழா திட்டம் பற்றி தமிழக அமைச்சர் கே கே எஸ் எஸ் ஆர் ராமச்சந்திரனிடம் ஒரு மணி நேரம் ஆலோசனை நடத்தியதாக பிரபு கூறினார் விரைவில் கேரள அரசுடனும் பேச்சுவார்த்தை நடத்த இருப்பதாகவும் பிரபு கூறினார்

பாசட் நிறுவனத்தார் கோவையை அடுத்த குப்பாபாளையம் கிராமத்தைத் தத்தெடுத்துள்ளனர் அதனை வளர்ச்சிக்கு உதவும் திட்டம் ஒன்றை மத்திய அமைச்சர் பிரபு துவக்கி வைத்தார்

இவ்விழாவில் பாசட் நிறுவனத்தின் தலைவரும் மேலாண்மை இயக்குனருமான என் பி சந்திரன் கலந்து கொண்டார்

# வெடிமருந்து ஆலை: தொழில் வளர்ச்சி வங்கி நிதியுதவி

சென்னை ஜூலை. 5. டிட்கோவின் சார்பு நிறுவனமான தமிழ்நாடு வெடிமருந்து தொழிற்சாலையின் மற்றொரு யூனிட்டான 'வெடி சாதன இயக்கப் பொறிகள்' தொழிற்சாலைத் திட்டத்திற்கு பாரதத்திலுள்ள இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி தற்போது ரூபாய் 15 கோடி கடன் வழங்க முன் வந்துள்ளது 1987 ஆகஸ்டிலிருந்து இந்நிறுவனம் இத்தொகையை பெறவுள்ளது

இத்திட்டம் 75 சதவீத முன்னேற்றம் கண்டுள்ளது முதல் கட்டமாக வெடி சாதனங்கள் அமைப்பு மற்றும் சோதனை பணிகள் தயார் நிலையிலுள்ளன சம்பந்தப்பட்ட வெளிநாட்டுச் சாதனங்களும் மற்றும் இதர சாதனங்களும் திட்டப் பகுதிக்கு வந்து சேர்ந்து விட்டன நிர்மாண இயக்கப் பணியை மேற்பார்வையிட வெளிநாட்டு இணை நிறுவனங்களின் வல்லுநர்கள் 1987 ஜூலை இறுதியில் வர இருக்கிறார்கள் மத்திய அரசு இத்தொழிற்சாலைக்கு வேண்டிய மூலப் பொருளான மருந்து ஆகியவைகளையும் இயக்கக் கருவிகளையும் இறக்குமதி செய்ய அனுமதித்துள்ளது

வெடிமருந்துகள் வாங்க இருப்பவர்களுடைய சரக்குகளின் பரிசோதனை செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கிறது ஆர் பலவேறு சாதனங்களைத் தயாரிப்பதற்கும் மத்திய கட்டுமானப் பணிகளை முடிப்பதற்கும் 1987 ஆகஸ்டிலிருந்து பணிகள் மேற்கொள்ளப்பட உள்ளது

### விற்பனை

மேலும் 1988 மார்ச் மாதத்தில் இந்நிறுவனம் வியாபார ரீதியிலான விற்பனையைத் தொடங்கவுள்ளது இத்திட்டம் முழுமைபெற்றால் இந்நிறுவனத்தின் விற்பனை கணிசமாக பெருகி மொத்த ஆதாயமும் ஈட்டும்

இது மட்டுமல்லாமல வாடிக்கையாளர்களுக்கு ஒரே நிலையில் வெடிமருந்துகளையும் வெடி சாதன இயக்கக் கருவிகளையும் இந்நிறுவனம் விற்பனை செய்து வருகிறது என்று டிட்கோ தலைவர் ஈ வெங்கடேசன் தெரிவித்துள்ளார்.

சரித்திரம் போற்றும் புரட்சித் தலைவரின்
10 ஆண்டு ஆட்சியிலே,ஏழைகள் ஏற்றம் பெற்றனர்...
நலிவுற்றோர் நல்வாழ்வு அடைந்தனர்...
கதர் கிராமத் தொழில் பணியிலே!

| | | |
|---|---|---|
| 1) | 1977-78ல் கதர் கிராமத் தொழில் உற்பத்தி | ரூ. 34 கோடி. |
| | 1986-87ல் கதர் கிராமத் தொழில் உற்பத்தி | ரூ. 140 கோடி. |
| 2) | 1977 வரை வாரியத்தில் வேலை வாய்ப்பு பெற்றோர் | 3,33,157 |
| | 1987 வரை வாரியத்தில் வேலை வாய்ப்பு பெற்றோர் | 7,94,263 |
| | ஆதி திராவிடர் | 1,03,725 |
| | மலைவாழ் மக்கள் | 10,363 |
| | மகளிர் | 2,34,888 |

தமிழ்நாடு கதர் கிராமத்
தொழில் வாரியம்
குறளகம், சென்னை-600 108

DIPR. 1617/87/MS/ELEGANT

# தம்பித்துரை தலைமையில் சபாநாயகர்கள் ஆலோசனை

ஆமதாபாத், ஜூலை 5- இந்தியா முழுவதும் உள்ள சட்டப்பேரவைகளில் ஒரே மாதிரியான விதிமுறை வகுப்பது குறித்து சபா நாயகர்கள் குழு ஆலோசனை நடத்தியது.

குஜராத் தலைநகரான ஆமதாபாத்தில் நாடாளு மன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை தலைமையில் இக்கூட்டம் நடந்தது.







Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by All india Anna D. M. K. Perarignar AnnaTrustpressat34 Nelson Manickam Road, MADRAS-600029

★★ பிரபு - ராதா
படம்: ஆனந்த்

# துளசி

**: விமரசனம் :**

வேறுபட்ட இரண்டு ஜாதியை சேர்ந்த ஆணும் பெண்ணும் காதலிப்பது இவர்கள் காதலுக்கு அவர்கள் பெற்றோர்கள் எதிர்ப்பு தெரிவிப்பது எதிர்ப்பை மீறி அந்த ஜோடிகள் இணைய முயலும் போது ஒரு பெரிய கலவரம் மூண்டு சில உயிர் பலி ஆவது இதை அடுத்து இந்தஜோடிகளை வாழவைப்பதுக என்ற வசனங்களோடு படத்தை முடிப்பதும் தமிழ் திரையுலகில் நீண்ட நெடுங் காலமாக தொடரும் முறை இந்த முறையைப் பயன் படுத்தி இன்று தமிழகத் தில் முன்னணியில் இருக் கும் பல இயக்குனர்கள் வெற்றி பெற்றுள்ளார்கள் இப்போது இயக்குனர் அமீர்ஜானும் இந்த முறை யைப் பயனபடுத்தி துளசி படத்தை உருவாக்கி இருக் கிறார்

இந்தப்படத்தில் தாழ்ந்த சாதியை சேர்ந்த வாலிப னாக முரளியும் உயர்ந்த சாதியைச் சேர்ந்த பெண் ணாக சீதாவும் இவர் களது காதலுக்கு எதிர்ப்பு தெரிவிக்கும் தந்தையாக மேஜர் சுந்தர்ராஜனும் இந்த ஜோடிகளை இணைக்க தன் உயிரையே தியாகம் செய்யும் வாலிப ராக சந்திரசேகரும் நடித்துள்ளனர்.

நகைச்சுவைக்கு செந்தில் சார்லி, மோகனப் பிரியா ஆகியோர் இருக் கின்றனர் நாய் பிடிப் பவராக செந்திலும் பட்டாணியாக சார்லியும் தோன்றி வயிறு குலுங்கச் செய்கின்றனர் ஆண்டவன் பெயரால் நடக்கும் மோசடி களையும் இந்தப் படத்தில் சித்தரித்துள்ளனர்.

பாடல்கள் குறிப்பிட்டு கூறும்படியாக இல்லை என்றாலும் சோலை இல்லை கண்ணுக்கு இதமான இயற்கை காட்சி களை வெகு அழகாக படம் பிடித்துள்ளனர்.

கிராமிய மணம் கமழும் இந்தப்படத்திற்கு கிரைக் கதை வசனம் அமைத்து அமீர்ஜான் இயக்கி இருக் கிறார் [illegible] இதுபோன்றுபல சம்பவங்கள் உள்ளன மொத்தத்தில் இந்த துளசி பெண்கள் மத்தியில் நல்ல வரவேற்பைபெறும்.

:-பாலுமணி:-

★★ முரளி - சீதா
படம்: அவள்மெல்லச்சிரித்தாள்

# வாசலிலே பூசணிப்பூ கங்கை அமரன்பாடல்

ராமராஜன் ரேகா ஜோடியாக நடிக்கும் ஸ்ரீ லட்சுமணா பிலிம்ஸ் 'செண்பகமே செண் பகமே' படம் பாடல் பதிவுடன் பிரசாத் ஸ்டுடி யோவில் துவங்கியது

கங்கை அமரன் எழுதிய
வாசலிலே பூசணிப்பூ
வச்சுப்புட்டா வச்சுப்
புட்டா
நேசத்துல எம் மனசை
தச்சுப்புட்டா தச்சுப்
புட்டா
பூவும் பூவும் ஒண்ணு
கலந்தது இப்போது
தேனும் பாலும் பொங்கி
வழியுது இப்போது''

என்ற இப்பாடல் எஸ் பி பாலசுப்ரமணியம் எஸ் ஜானகி துவக்கு தினத் தன்று பாட இளையராஜா இசையமைத்தார்

ரகுவரன் சில்க்ஸ்மிதா ஆர். பி விஸ்வம் செந்தில் ஜனகராஜ் விஜயன் சண் முகசுந்தரம். கல்லாப் பெட்டிசிங்காரம் எஸ். என் பார்வதி வரலட்சுமி செஞ்சி கிருஷ்ணன் குமரி முத்து இன்னும் பலர் நடிக்க நிவாஸ் ஒளிப்பதிவு செய்கிறார்

ஜூலை 2வது வாரத்தில் படப்பிடிப்பு துவங்கும் இதை எஸ் மோகன் கேடி தட்சிணாமூர்த்தி கே ராஜ்மோகன் ஆகி யோர் கூட்டாக தயாரிக் கிறார்கள்.

கதை திரைக்கதை வசனம் பாடல்களைஎழுதி கங்கை அமரன் இயக்கி வருகிறார்.

# அனுராதா அழகை ரசிக்க கிழவர்கள் போட்டா போட்டி

நேஷனல் மூவிமேக்கர்ஸ் சார்பில் திருச்சி சந்திரன் தயாரிக்கும் படம் கோவில் மணியோசை இப்படத்திற் கான படப்பிடிப்பு திருச் சியை அடுத்த ஸ்ரீரங்கம். பேட்டை வாயத்தலை புளியஞ்சோலை திரு வளர்சோலை சமயபுரம் ஆகிய இடங்களில் 5 நாட் கள் நடைபெற்றது

ரகுவரன், பாண்டியன் செந்தில் புதுமுகம் மீனா அனுராதா குலதெய்வம் ராஜகோபால் கே கே சௌந்தர் ஜோக்கர் துளசி உள்ளிட்ட பலர் இந்தப் படத்தில் நடித்து வரு கின்றனர்

அனுராதா கால்வாயில் குளித்துக் கொண்டிருக் கிறார் அவரது அழகைக் காண உசிலைமணி தலைமையில் கிழவர்கள் அணிவகுத்து வந்து காத்து கிடக்கின்றனர் கிழவர் களின் எண்ணத்தை புரிந்து கொண்ட அனு ராதா உடனே தனது பாவாடை தண்ணீரில் சென்று விட்டதாக கூப பாடு போடுகிறார் இதைக் கேட்ட கிழவர்கள்போட்டி போட்டுக்கொண்டு தண் ணீருக்குள் குதிக்கின்றனர் கிழவர்கள் தண்ணீருக் குள் குதித்த நேரம்பார்த்து அனுராதா தண்ணீரை விட்டு வெளியேவந்து உடை உடுத்த செலகிறார் ஆனால் கிழவர்களோ தண்ணீருக்குள் போட்டி போட்டுக்கொண்டு இருக் கின்றனர்.

இந்தக் காட்சி படமாக் கப்பட்ட போது ஏராள மான மக்கள் கூடி இருந்து படப்பிடிப்பை வேடிக்கை பார்த்தனர் ஆர் சுந்தர ராஜன் திரைக்கதை அமைத்துள்ள இப்படத் திற்கு கதை வசனம் அமைத்து நேதாஜிஇயக்கி வருகிறார்.

# நான் ஒரு முட்டாளுங்க

ஸ்ரீ விக்னேஸ்வர பிலிம் சார்பாக 'நான் ஒரு முட்டாளுங்க' என்ற வண்ணப்படம் துவக்கப் பட்டுள்ளது

பாண்டியராஜன் நிஷாந்தி ஜனகராஜ் செந்தில், சுமித்ரா வடிவுக் கரசி மற்றும் பலர் இப் படத்தில் நடிக்கின்றனர் எஸ் ஏ ராஜ்குமார் பாடல் கள், எழுதி இசையினை கவ னிக்க கதை திரைக்கதை வசனம் அமைத்து ஜீவபா லன் இயக்குகிறார்

எஸ் ஜெயக்குமார் ஏ சீனிவாசன் டி ராமராஜ் ஆகியோர் இப்படத்தை தயாரித்து வருகின்றனர்

# நதியா பிறந்தநாள்: சுரேஷ் உற்சாகம்

சுமதி பயத்துடன் நின்று கொண்டிருக்கிறாள் என்ன யோசிச்சுகிட்டிருக்கே இப்ப எல்லாம் என் இஷ்டப்படி தான் நடக்கணும் என்று கத்த சுமதி தப்பி ஓட முயற்சிக்கிறாள் அவளை தடுத்து நிறுத்திய சுந்தர் இப்ப நீ நோராகான்பரன்ஸ் ஹாலுக்குள்ள போறே என்று கூற எதுக்கு என் கிறாள் அவள் யூ கோ டு கான்பரன்ஸ் ஹால் என கத்துகிறான் அவன் ஹாலுக்குள் நுழைகிறாள் சுமதி அங்கே ஹேப்பி பர்த்டே சுமதி என்ற குரல்கள் கேட்டு நிமிர்ந்து பார்க்கிறாள் பின்னால் வந்த சுந்தர் உன்னோட பர்த்டேட் அப்ளிகேஷன்லபார்த்தேன் ஒனக்கு சர்ப்ரைஸ்சிங்கா இருக்கட்டுங்கிறதுக்காக இப்படி ஒரு ஏற்பாடு பண் ணினேன் என்று கூற அவள் மௌனமாகிறாள் இக் காட்சி ராஜ்காளியம்மன் புரொடக்ஷன்ஸ் இனிய உறவு பூத்தது படத்திற் காக படமாக்கப பட்டது இதில் சுந்தராக சுரேஷ் சுமதியாக நதியா நடித்தனர். சோ. எஸ் வி. சேகர். மற்றும் பலர் பங்கு பெறும் இப்படத்தின் ஒளிப்பதிவை பி ஆர். விஜயலட்சுமி கவனிக்க கவிஞர் வாலியின் பாடல் களுக்கு இளையராஜா இசையமைக்க கதை திரைக்கதை அமைத்து வசனம் எழுதி இயக்கு கிறார். ஸ்ரீதர்

# முரளியுடன் சீதாவை சேர்க்க மாதுரி முயற்சி

ஸ்ரீ கவிதா சினி ஆர்ட்ஸ் தயாரித்து வரும 'அவள் மெல்ல சிரித்தாள்' படத் தின படப்பிடிப்பு திருச்சி யில் நடந்தது!

முரளி சீதா மாதுரி ரவீந்தர் நடித்த முக்கி மான காட்சிகள் படமாக் கப்பட்டன

குறிப்பிட்ட சில கார ணங்களுக்காக பலாத்கார மாக சீதாவை மணந்து கொள்கிறார் முரளி ஆனால் இருவரும சேர்ந்து வாழா மல் பிரிந்து விடுகின்றனர்.

இதற்கிடையில் சீதாவின் அக்காவும் அந்த ஊரின் டீச்சருமான மாதுரி முரளியை விரும்புகிறார் ஆனால் முரளியோ தனது மனைவி மீது மிகுந்த அன்புடன் இருக்கிறார் அந்த ஊரில் அனாதை யாக வாழ்ந்து வரும் அப்பாவி கோணையனான ரவீந்தர் மாதுரியை விரும்புகிறார் இப்படி இவர்கள் சம்பந்தப்பட்ட காட்சிகள் இங்கு பட மாக்கப்பட்டது இந்த காட்சிகள் திருச்சியில் உள்ள புலிவலம் கிலுப முக்கொம்பு பகுதிகளிலும் படமாக்கப்பட்டன

ரவீந்தர் தனது காதலி மாதுரி பஸ் ஏறி போவதற் காக ஓடும் காட்சியில் தொடர்ந்து ரவீந்தரும் ஓடி நிற்கும் காட்சி இங்குதான் பட மாக்கப்பட்டன அந்தக் காட்சியில் வந்தப் பகுதி களில் மேய்ந்து கொண் டிருந்த நூற்றுக்கணக் கான மாடுகள் ரவீந்தரை கீழே தள்ளி மிதித்து விட்டன. இதுமட்டுமல்ல மல் ஓடி வரும் மாது சேற்றுச்சகதியிலும் விழுந்து அவஸ்தைக்குள்ளானார் இந்த சம்பவங்கள் அவர் கள் எதிர்பாராமலே நடந்துவிட்டன அதனால் படப்பிடிப்பு குழுவினரும் படப்பிடிப்பு பார்க்க வந்த வர்களும்மிகுந்த பரபரப்புக் குள்ளாயினர்.

பிறகு முரளி சீதாவை மாதுரி சேர்த்து வைக்கும் காட்சிகளும் படமாக்கப் பட்டன.

வேகமாக வளர்ந்து வரும் இப்படத்தின் ஒளிப் பதிவை ஆர் எம் சுப்பு கவனிக்க இசை பாடல் களை கங்கை அமரன் கவனிக்கிறார் ஆகஸ்டு பதினைந்தில் வெளியிடு வதற்காக வேகமாக வளர்ந்து வரும் அவள் மெல்ல சிரித்தாள்படத்தை தயாரித்து வருபவர் நக் வள்ளி எஸ் பன்னீர் செல்வம் இந்த படத்திற்கு கதை திரைக்கதை வசனம் டைரக்ஷன் எம். என் ஜெயகாந்த கவனிக்கிறார்

★ விஜய்காந்த் - ராதா படம்: சட்டம் ஒரு விளையாட்டு

# பெஸ்ட்மூவிசாரின் வினாடிக்கு வினாடி

பெஸ்ட்மூவி புரொடக்சன் சார் வினாடிக்கு வினாடி எனும்மர்மபட்டகதையம சம கொண்ட படத்தை உருவாக்குகின்றனர், இப் படத்தின் துவக்கவிழா கடந்த 2ந்தேதி ஏ வி.எம் மில் பாடல் பதிவுடன் துவங்கியது.

சென்னை நகர செரீப் சரவணன குத்துவிளக் கேற்றி வைத்து படத்தை துவக்கி வைத்தார் துவக்க நாளன்று கவிஞர் மேத்தா எழுதிய பாடல் சங்கர் கணேஷ் இசையில் ஒலிப் பதிவானது

துவக்க விழாவில் ஏராளமான திரையுலக பிரமுகர்கள் பங்கேற்று வாழ்த்தினர் கே காசிம் மதுரை அசோக் ஆகியோர் தயாரிக்கும்இப் படத்திற்கான நட்சத்திர தேர்வு நடைபெற்று வரு கிறது.

# டெலிபோன் செய்ய முன்பணம் கட்டிய விசேஷ கார்டு

சென்னை, ஜூலை 5- சில குறிப்பிட்ட இடங் களில் இருந்து போன் செய்ய முன் பணம் கட்டிய விசேஷ கார்டு கள் அறிமுகப்படுத்தப்பட உள்ளது.

இதுகுறித்து மத்திய துணை அமைச்சர் சந் தோஷ் மோகன் கூறிய தாவது:-

தபால் தந்தி துறையில் முன் பணம கட்டி மின் காந்த கார்டு ஒன்றைப் பெற்றுக் கொள்ளலாம்

விமான நிலையங்கள் மருத்துவமனைகள் மற்றும் முக்கியமான இடங்களில் விசேஷ டெலிபோன்கள் அமைக் கப்படும்.

இந்த டெலிபோன்களில் மின்காந்த கார்டுகளை பொருத்தி வேண்டிய இடத்திற்கு போன் செய்து கொள்ளலாம் எஸ் டி டி போன்களும் செய்யலாம்.

விரைவில் இந்த புதிய வசதி மக்களுக்குக் கிடைக் கும்.

இவ்வாறு அமைச்சர் சந்தோஷ் மோகன் தெரிவித்துள்ளார்.